23rd March 1961]

SRI K. B. S. MANI : ஸார், இம்மாதிரி தண்டிக்கப்பட்டு, நீக்கப் பட்ட போலீஸ்காரர்கள் சிறு வயதிலேயே உத்தியோகத்திற்கு வருவதனுல், மற்றத் தொழில்கள் செய்ய தகுதியற்றவர்களாக இருக்கிறார்கள் என்பதை யும் மனதில் கொண்டு, மறு பரிசீலனை செய்து, ரிவர்ஷன் போன்ற சில பனிஷ்மெண்டுகளைக் கொடுத்து அவர்களை ரீ-எம்ப்ளாய் பண்ண முயற்சி எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவர்கள் திருப்தி கரமாக வேலை செய்ய, கட்டுப்பாடு மிக அவசியமாக இருக்கிறது. எல்லா வற்றையும் பார்த்துத்தான் நடவடிக்கை எடுக்கிறோம். இதிலெல்லாம் தனிப்பட்டவர்கள் பேரில் அங்கத்தினர் அதிக அக்கரை எடுத்துக் கொள்வது நல்லதல்ல என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

SRI T. S. RAMASWAMY : May I know whether any of the police officials and constables coming from Kanyakumari district were dismissed? In view of the "changed over" circumstances and the former practices prevailing in the former Travancore-Cochin State, may I know whether the Government will consider their case favourably?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not have the particulars about the matter relating to the hon. Member's question. But, I may tell him that no member of the Police Force from Kanyakumari district has been dismissed because he belonged to Kanyakumari.

*Social Welfare Schools*

DEPUTY SPEAKER : As the hon. Member who gave notice of starred question No. 1019 is not in his seat, the question and answer will be printed in the Proceedings.

* 1019 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) the number of Social Welfare Schools in our State; and

(b) the number recognised?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Presumably the Members refers to the State Social Welfare Advisory Board, Madras. No schools are run by the Board in this State.

(b) Does not arise.

*Vedaranyam Block (misappropriation)*

*** 1020 Q.—SRI A. VEDARATHNAM** : கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வேதாரண்யம் பிளாக்கில் ஏதேனும் நிதி கையாடல் நடந்திருக் கிறதா ?

(இ) எவ்வளவு நிதி கையாடப்பட்டது ?

(உ) அரசாங்கம் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) நடந்திருக்கிறது.

(இ) ரூ. 1,527·87 நயாபைசே.

(உ) நிதியைக் கையாடிய கணக்கர் போலீசாரால் கைது செய்யப்பட்டு நாகப்பட்டிணம் சப்-மாஜிஸ்ட்டிரேட்டால் விசாரிக்கப்பட்டு, ஆறு மாத கடுங் காவல் தண்டனை விதிக்கப்பட்டார். ரூ. 673·96 நயாபைசே திருப்பிப் பெறப்

[23rd March 1961

பட்டுள்ளது. மீதித் தொகையைக் கணக்கரின் பூர்வீக சொத்திலிருந்து திருப்பிப் பெற தஞ்சாவூர் கலெக்டர் தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

SRI A. VEDARATHNAM : இந்த நிதியைக் கையாள்கிறவர்கள் போதுமான நிதி இல்லாதவர்களாக இருப்பதனால் இந்த நிலைமை ஏற்பட சந்தர்ப்பம் வருகிறது ; ஆகவே நிதியைக் கையாள்பவர்களிடமிருந்து தகுந்த செக்யூரிடி வாங்கி, அப்படி உள்ளவர்களை ப்ளாக்குகளில் நியமிக்க ஏற்பாடு செய்ய அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அவசியமாக இருக்கக் கூடிய கேசுகளில் ஜாமீன் தொகை வாங்கப்படுகிறது. இந்த இடத்தில் பெற்றார்களா என்ற விவரம் இப்பொழுது என்னிடம் இல்லை.

*Co-operative Hand-pounded Rice Industry Society in North Madras (misappropriation)*

*1021 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வட சென்னையிலுள்ள கூட்டுறவு கைக்குத்தல் அரிசி தொழில் சங்கத்தில் 6,000 ரூபாய்க்கு மேல் மோசடி ஏற்பட்டிருப்பது உண்மையா ?

(இ) அதற்குப் பொறுப்பாளிகளின்மேல் எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No Sir, but a sum of R.s 2,425·59 has not been properly accounted for in the Cash Book of the North Madras Handpounding Rice Workers' Co-operative Society, Limited.

(b) An enquiry is being conducted into the matter.

SRI V. K. KOTHANDARAMAN : எவ்வளவு காலமாக விசாரணை நடத்தப்பட்டு வருகிறது ? விசாரணை முடிய இன்னும் எவ்வளவு காலம் பிடிக்கும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எவ்வளவு காலமாக என்ற விவரம் இப்பொழுது என்னிடம் இல்லை ; எப்பொழுது முடியும் என்று சொல்ல முடியாது.

SRI V. SUBBIAH : கூட்டுறவு இலாகாவில் பரவலாக இம் மாதிரி எல்லா செக்ஷன்களிலும், ஸ்டோர்ஸ், மார்கெடிங் சொசைடிகள் முதலியவைகளில் இந்தக் குறை ஜாஸ்தியாக இருக்கிறதே, அதற்குக் காரணம் என்ன ? அப்படி நடக்காமல் பார்த்துக் கொள்ளப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது கூட்டுறவு இலாகாவில் மட்டுமல்ல, மற்ற சர்க்கார் இலாகாக்களிலும், தனிப்பட்டோர் ஸ்தாபனங்களிலும் ஏற்படுகிறது; வருஷா வருஷம் ஆடிட் செய்யப்படுகிறது. அப்படி ஆடிட் செய்யப் பட்டபோது தான் இந்தப் பணக் குறைவு கண்டுபிடிக்கப் பட்டது. அதன் பேரில் விசாரணை நடத்தப்பட்டது, நடவடிக்கை எடுக்கப் பட்டது.

*Actors and Technicians (award of prizes)*

* 1022 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether the Government have any proposal to award prizes for the best actors and technicians; and

(b) if so, the details thereof?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) No, Sir.

(b) Does not arise.